# ॥ भवानीभुजङ्गम् ॥

## பவாநீ புஜங்கம்

(1)

षडाधारपङ्केरुहान्तर्विराज –
त्सुषुम्नान्तरालेऽतितेजोलसन्तीम् ।
सुधामण्डलं द्रावयन्तीं पिबन्तीं
सुधामूर्तिमीडे चिदानन्दरूपाम् ॥

ஷடாதார பங்கேருஹாந்தர்விராஜத்
ஸுஷும்நாந்தராலேऽதிதேஜோலஸந்தீம் ।
ஸுதாமண்டலம் த்ராவயந்தீம் பிபந்தீம்
ஸுதாமூர்திமீடே சிதானந்த ரூபாம் ॥

ஆறு ஆதாரங்களாகிய தாமரை மலருக்குள் ஸுஷும்நா நாடியின் நடுவில் வெகுதேஜஸுடன் விளங்குகின்றவளும், சந்திரமண்டலத்தைக் கரைத்து குடிக்கின்றவளும், ஜ்ஞானனந்த ஸ்வரூபிணியாகவும், அம்ருத வடிவாயுமுள்ள எனதம்பிகையை ஸ்தோத்ரம் செய்கிறேன்.

(2)

ज्वलत्कोटिबालार्कभासारुणाङ्गीं
सुलावण्यश्रृङ्गारशोभाभिरामाम् ।
महापद्मकिञ्जल्कमध्ये विराज –
त्रिकोणे निषण्णां भजे श्रीभवानीम् ॥

ஜ்வலத்கோடி பாலார்க பாஸாருணங்கீம்
ஸுலாவண்ய ச்ருங்கார சோபாபிராமாம் ।
மஹாபத்ம கிஞ்ஜல்க மத்யே விராஜத்
தரிகோணே நிஷண்ணாம் பஜே ஸ்ரீபாவாநீம் ॥

ஜ்வலிக்கும் கோடி பால சூர்யர்கள் ஒளிபோல் செம்மேனியள், நல்ல அழகும், சிருங்காரமும் சேர்ந்திருப்பதால் கவர்ந்திழுக்கும் அழகி, மஹாபத்மத்தின் கிஞ்ஜல்கத்தினிடையே விளங்கும் த்ரிகோணத்தில் அமர்ந்திருக்கும் பவாநீ மாதாவை சேவிக்கிறேன்.

(3)

क्वणत्किङ्किणीनूपुरोद्भासिरत्न –
प्रभालीढलाक्षार्द्रपादाब्जयुग्मम् ।
अजेशाच्युताद्यैः सुरैः सेव्यमानं
महादेवि मन्मुर्ध्नि ते भावयामि ॥

க்வணத்கிங்கிணீ நூபுரோத்பாஸி ரத்ன
ப்ரபாலீட லாக்ஷார்த்ர பாதாப்ஜயுக்மம்।
அஜேசாச்யுதாத்யை: ஸுரை: ஸேவ்யமானம்
மஹாதேவி மன்மூர்த்நி தே பாவயாமி ॥

ஒலிக்கும் தண்டை, சதங்கை முதலியவற்றிலுள்ள இரத்ன கற்களின் ஒளி ஊடுருவிய செம்பஞ்சுக் குழம்பினால் ஈரமான உனது திருவடித் தாமரைகள், பிரம்ம - விஷ்ணு - மசேச்வர்களால் சேவிக்கப்படுவதையும், ஹே மகாதேவி! என் தலையில் இருப் பதையும் பாவித்து மகிழ்கிறேன்.

(4)

सुशोणाम्बराबद्धनीवीविराज –
न्महारत्नकाञ्चीकलापं नितम्बम् ।
स्फुरद्दक्षिणावर्तनाभिं च तिस्रो
वलीश्च ते रोमराजिं भजेऽहम् ॥

ஸுசோணாம்பராபத்த நீவீ விராஜத்
மஹாரத்ன காஞ்சீகலாபம் நிதம்பம்।
ஸ்புரத்தக்ஷிணாவர்த நாபிம் ச திஸ்ரோ
வலீஸ்ச தே ரோமராஜிம் பஜே஽ஹம் ॥

ஹே தேவி! செம்பட்டு உடுத்தி முடிந்தபின் அதன் மேல் ரத்னம் இழைத்த ஒட்டியாணம் அணிந்த இடுப்பு, பளிச்சிடும் வலம்புரி நாபி, மூவளிகள், உரோமவரிசை இவற்றையும் மனதளவில் சேவிக்கிறேன்.

(5)

लसद्वृत्तमुत्तुङ्गमाणिक्यकुम्भो –
पमश्रि स्तनद्वन्द्वमम्बाम्बुजाक्षि।
भजे दुग्धपूर्णाभिरामं तवेदं
महाहारदीप्तं सदा प्रस्नुतास्यम् ॥

லஸத் வ்ருத்த முத்துங்க மாணிக்ய கும்போ
பமச்ரி ஸ்தன த்வந்த்வ மம்பாம்புஜாக்ஷி।
பஜே துக்தபூர்ணாபிராமம் தவேதம்
மஹாஹாரதீப்தம் ஸதா ப்ரஸ்நுதாஸ்யம் ॥

தாமரையிதழ் கண்ணி தாயே! உனது வட்ட வடிவில் உயரமான மாணிக்ய குடம் போன்று அழகிய இரு ஸ்தனங் களையும் சேவிக்கிறேன். அவை நிரம்பிய பாற்குடமாகவே, எப்பொழுதும் கசிவதாகவே முத்துஹாரங்கள் தொங்கு வதாகவே உள்ளன.

(6)

शिरीषप्रसूनोल्लसद्बाहुदण्डै –
र्ज्वलद्बाणकोदण्डपाशाङ्कुशैश्च।
चलत्कङ्कणोदारकेयूरभूषो –
ज्ज्वलद्भिर्लसन्तीं भजे श्रीभवानीम् ॥

சிரீஷப்ரஸூந - உல்லஸத்பாஹுதண்டை:
ஜ்வலத்பாண கோதண்ட பாசாங்கு சைஸ்ச।
சலத் கங்கணோதார கேயூர பூஷோ
ஜ்வலத்பி: லஸந்தீம் பஜே ஸ்ரீபவானீம் ॥

ஸ்ரீ பவாநீ மாதாவின் நீண்ட கைகள், வாகைப்பூ சுற்றிய தாயும், அம்பு, வில், பாசம், அங்குசம் இவை மிளிர்வதாயும், குலுங்கும் கை வளைகளும், பெரிய தோள்வளைகளும் கொண்டு தேவியை மேலும் அழகுபடுத்துகின்றன. அத்தகைய பவாநீயை சேவிக்கிறேன்.

(7)

शरत्पूर्णचन्द्रप्रभापूर्णबिम्बा –
धरस्मेरवक्त्रारविन्दां सुशान्ताम्।
सुरत्नावलीहारताटङ्कशोभां
महासुप्रसन्नां भजे श्रीभवानीम्॥

சரத்பூர்ண சந்த்ரப்ரபாபூர்ண பிம்பா
தரஸ்மேர வக்த்ராரவிந்தாம் ஸுசாந்தாம்।
ஸுரத்னாவளீ ஹார தாடங்க சோபாம்
மஹாஸுப்ரஸன்னாம் பஜே ஸ்ரீபவானீம்॥

ஸ்ரீ பவானீ தேவி, மாணிக்யக் கற்கள் பதித்த ஹாரம் காதோலை இவைகளால் பளபளக்கும் சாந்தமான முகப்பொலிவுடன் இருக்கிறாள். சரத்காலத்து பூர்ணசந்திர ஒளி நிரம்பிய கோவைப்பழ உதட்டின் மேல் தவழும் புன்முறுவல் வேறு அவள் தாமரை முகத்தில் பரவியுள்ளது. அத்தகைய ஸ்ரீ பவானியை சேவிக்கிறேன்.

(8)

सुनासापुटं सुन्दरभ्रूललाटं
तवौष्ठश्रियं दानदक्षं कटाक्षम्।
ललाटीलसद्गन्धकस्तूरिभूषं
स्फुरच्छ्रीमुखाम्भोजमीडेऽहमम्ब॥

ஸுநாஸாபுடம் ஸுந்தரப்ரூலலாடம்
தவெளஷ்டச்ரோயம் தானதக்ஷம் கடாக்ஷம்।
லலாடோல்லஸத் கந்தகஸ்தூரி பூஷம்
ஸ்புரத்ஸ்ரீ முகாம்போஜ மீடேऽஹமம்ப॥

ஹே தாயே! நல்ல நாசியும், அழகிய புருவம், நெற்றி இவற்றையுடையதும், உதட்டு அழகையுடையதும், வேண்டியதைத் தரும் கடாக்ஷம், நெற்றியில் சந்தனம், கஸ்தூரி திலகம் இவற்றைக் கொண்டதுமான உனது முகத்தை சேவிக்கிறேன்.

(9)

चलत्कुन्तलान्तर्भ्रमद्भृङ्गबृन्दं
घनस्निग्धधम्मिल्लभूषोज्ज्वलं ते।
स्फुरन्मौलिमाणिक्यबद्धेन्दुरेखा-
विलासोल्लसद्दिव्यमूर्धानमीडे॥

சலத்குந்தலாந்தர் ப்ரமத் ப்ருங்க ப்ருந்தம்
கனஸ்நிக் ததம்மில்ல பூஷோஜ்வலம் தே।
ஸ்புரன்மௌலி மாணிக்ய பத்தேந்துரேகா
விலாஸோல்லஸத் திவ்ய மூர்தானமீடே॥

ஹே தாயே! உனது உச்சிப்பூ வைரத்துடன் இணைத்து கட்டிய சந்திரப்பிறையழகும் சேர்ந்துள்ள சீரிய தலையை சேவிக்கிறேன். அது கனமாயும், மழமழப்பாயுமுள்ள கொண்டையுடையதாயும், சிதறியாடும் பொடிக் கேசத்தினிடையே மொய்க்கும் வண்டுகளால் அழகாயுமுள்ளது.

(10)

इति श्रीभवानि स्वरूपं तवेदं
प्रपञ्चात्परं चातिसूक्ष्मं प्रसन्नम्।
स्फुरत्वम्ब डिम्भस्य मे हृत्सरोजे
सदा वाङ्मयं सर्वतेजोमयं च॥

இதிஸ்ரீபவாநி ஸ்வரூபம் தவேதம்
ப்ரபஞ்சாத்பரம் சாதிஸூக்ஷ்மம் ப்ரஸன்னம்।
ஸ்புரத்வம்ப டிம்பஸ்யமே ஹ்ருத்ஸரோஜே
ஸதா வாங்மயம் ஸர்வதேஜோமயம்ச॥

ஹே தாயே பவாநீ! உலகைக் கடந்த மிக நுண்ணிய ஆனால் மிகமிகத் தெளிவான உனது வடிவம் இந்த சிறியேனுடைய ஹ்ருதயத்தாமரையில் தோன்றட்டும். அந்த வடிவம் எப்பொழுதும் ஸரஸ்வதீமயமாயும், லக்ஷ்மீமயமாயும் இருப்பதுதானே!

## (11)

गणेशाणिमाद्याखिलैः शक्तिबृन्दै –
वृतां वै स्फुरच्चक्रराजोल्लसन्तीम् ।
परां राजराजेश्वरि त्रैपुरि त्वां
शिवाङ्कोपरिस्थां शिवां भावयामि ॥

கணேசாணி மாத்யாகிலை: சக்திப்ருந்தை:
வ்ருதாம் வை ஸ்புரச்சக்ரராஜோல்லஸந்தீம் ।
பராம் ராஜராஜேச்வரி, த்ரைபுரி! த்வாம்
சிவாங்கோபரி ஸ்தாம்சிவம் பாவயாமி ॥

ஹே ராஜராஜேச்வரீ! திரிபுரே! சிவமயமான கட்டில் கொண்டு பரசிவையான உன்னை தியானிக்கிறேன். நீ, கணேசர், அணிமாதி சித்திகள், சக்திகள் ஆகியவற்றால் சூழப்பெற்று, சக்ரராஜ ஸ்ரீசக்கரத்தில் விளங்குகிறாய்.

## (12)

त्वमर्कस्त्वमिन्दुस्त्वमग्निस्त्वमाप –
त्वमाकाशभूवायवस्त्वं महत्त्वम् ।
त्वदन्यो न कश्चित्प्रपञ्चोऽस्ति सर्व
त्वमानन्दसंवित्स्वरूपां भजेऽहम् ॥

த்வமர்க: த்வமிந்துஸ்த்வமகபனிஸ்த்வ மாப:
த்வமாகாச பூவாயவஸ்த்வம் மஹத்த்வம் ।
த்வதந்யோ ந கஸ்சித் ப்ரபஞ்சோSஸ்தி ஸர்வம்
த்வமானந்தஸம் வித்ஸ்வரூபாம் பஜேவுஹம் ॥

ஹே தாயே! நீயே சூர்யன், நீயே சந்திரன், நீதான் அக்னி. தண்ணீரும் நீயேதான். நீயே ஆகாயம், பிரதிவீ, வாயு ஆகியவையும், ஏன் மஹத்தும் நீதானே: நீயன்றி வேறு ப்ரபஞ்சம்தான் எது? ஆனந்த - ஞான - வடிவான உன்னைதான் நான் ஸேவிக்கிறேன்.

(13)

श्रुतीनामगम्ये सुवेदागमज्ञा
महिम्नो न जानन्ति पारं तवाम्ब।
स्तुतिं कर्तुमिच्छामि ते त्वं भवानि
क्षमस्वेदमत्र प्रमुग्धः किलाहम्॥

ச்ரேதீநாமகம்யே ஸுவேதாகமஜ்ஞா
மஹிம்நோ நஜாநந்திபாரம் தவாம்ப।
ஸ்துதிம் கர்துமிச்சாமி தே த்வம் பவாநி
க்ஷமஸ்வேதமத்ர ப்ரமுக்த: கிலாஹம்॥

வேதங்கள் கூட நெருங்கவில்லை உன்னை. ஹே பவாநீ! நீயோ வேதங்களையும் ஆகமங்களையும் நன்கு அறிந் துள்ளாய்! உனது அருமை பெருமைகளை தெரிந்து கொண்டவரில்லை. நான் மயங்கிப் போய்தான் உன்னை ஸ்தோத்ரம் செய்ய முற் பட்டேன். இதை நீ பொறுத்தருள் அன்னையே!

(14)

गुरुस्त्वं शिवस्त्वं च शक्तिस्त्वमेव
त्वमेवासि माता पिता च त्वमेव।
त्वमेवासि विद्या त्वमेवासि बन्धु–
र्गतिर्मे मतिर्देवि सर्वं त्वमेव॥

குருஸ்த்வம் சிவஸ்த்வம்ச சக்திஸ்த்வமேவ
த்வமேவாஸிமாதா பிதாச த்வமேவ।
த்வமேவாஸி வித்யா த்வமேவாஸி பந்து:
கதிர்மே மதிர்தேவி ஸர்வம் த்வமேவ॥

ஹே தேவி! நீதான் எனக்கு குரு. சிவனும் சக்தியும் நீயே. நீயே எனக்கு தாயும் தந்தையும். நீயே எனது கல்வி. நீயேதான் எனது உறவினரும் கூட. என் மேல்நோக்கிய போக்கும், புத்தியும் எல்லாமும் நீயேதான்!

(15)

शरण्ये वरेण्ये सुकारुण्यमूर्ते
हिरण्योदराद्यैरगण्ये सुपुण्ये ।
भवारण्यभीतेश्च मां पाहि भद्रे
नमस्ते नमस्ते नमस्ते भवानि ॥

சரண்யே வரேண்யே ஸுகாருண்ய மூர்த்தே
ஹிரண்யோதராத்யை ரகண்யே ஸுபுண்யே ।
பவாரண்யபீதேஸ்ச மாம்பாஹி பத்ரே
நமஸ்தே நமஸ்தே நமஸ்தே பவாநி ॥

நல்ல புண்யமான, மங்கலமான ஹே பவாநி தேவி! நீ இரக்கம் நிரம்பி சிறந்து காப்பவள். ஹிரண்யகர்பர் முதலியோராலும் நீ நெருங்க முடியாதவள். உனக்கு நமஸ்காரம், நமஸ்காரம், நமஸ்காரம். என்னை ஸம்ஸார பீதியிலிருந்து காப்பாயாக.

(16)

इतीमां महच्छ्रीभवानीभुजङ्ग-
स्तुतिं यः पठेद्भक्तियुक्तश्च तस्मै ।
स्वकीयं पदं शाश्वतं वेदसारं
श्रियं चाष्टसिद्धिं भवानी ददाति ॥

இதீமாம் மஹத்ஸ்ரீ பவாநீ புஜங்க
ஸ்துதிம்ய: படேத் பக்தியுக்தஸ்ச தஸ்மை ।
ஸ்வகீயம் பதம் சாச்வதம் வேதஸாரம்
ச்ரேயம் சாஷ்டஸித்திம் பவாநீ ததாதி ॥

இவ்வாறிந்த பெரிய ஸ்ரீ பவாநீ புஜங்க ஸ்தோத்திரத்தை பக்தியுடன் படிப்பவருக்கு ஸ்ரீ பவாநீதேவி, தனது பதவியையும் முக்தியையும் செல்வத்தையும் அஷ்டமாஸித்திகளையும் தந்து அருள்வாள்.

(17)

भवानी भवानी भवानी त्रिवार–
मुदारं मुदा सर्वदा ये जपन्ति ।
न शोको न मोहो न पापं न भीतिः
कदाचित्कथंचित्कुतश्चिज्जनानाम् ॥

பவாநீ பவாநீ பவாநீ த்ரிவாரம்
உதாரம்முதா ஸர்வதா யே ஜபந்தி ।
நசோகோ நமோஹோ நபாபம் நபீதி:
கதாசித் கதம்சித் குதஸ்சித் ஜனாநாம் ॥

எவரெவர், பவாநீ பவாநீ பவாநீ என்று மூன்று முறை மகிழ்ச்சியுடனும் எப்பொழுதும் உரக்கஜபம் செய்கிறார்களோ, அவரனைவருக்கும் துன்பமும், மோஹமும், அச்சமும் எங்கிருந்தும், எவ்வகையிலும், எதன் மூலமும் ஏற்படாது.

பவாநீபுஜங்கம் முற்றிற்று

